# *Tiruppukal̲amirtam*

# *Malar 6, ital̲ 1*

# *April 1941*

Record no. 166

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.

## ஒரு சிறந்த மாத வெளியீடு.



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

(மலர் 6.)

விஷு ஹு சித்திரை மீ முதல் பங்குனி மீ வரையில்
*1941* ஹு ஏப்ரல் மீ முதல் *1942* ஹு மார்ச்சு மீ வரையில்

திருப்புகழ்த் தொண்டன்,

**கிருபானந்தவாரி**

"திருப்புகழமிர்தம்" ஆபீஸ்,
108 சாமிநாயக்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

1942.

விலை ரூ. 1–12–0 ] [ தபாற்கூலி வேறு.

# திருப்புகழமிர்தம்.

## பொருளடக்கம்.


விஷயங்கள். — பக்கங்கள்.

### திருப்புகழ்.

(பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரையுடன்)

நான்காவது படைவீடு.

சுவாமிமலை— குமரகுருபர முருக 1
,, அவாமருவினுவ 25
,, கறைபடு 49

ஐந்தாவது படைவீடு,

குன்றுதோருடல்— வஞ்சகலோபமூடர் 73
,, அதிருங்கழல் 97
,, தறையின் மானுட 99
,, பத்தியால் 121
குன்றக்குடி நேசாசாரா 123
தென்சேரி கிரி எங்கேனு 145
திருக்கழுகுன்றம் வேதவெற்பிலே 150
,, ஒலமிட்ட 169
கயிலைமலை தேனுந்து 193
,, புமியதனிற் 217
திருவேங்கடம் சாந்தமில் 237
திருத்தணிகை வரிக்கலையினிகரான 257

### வரலாறுகள்.

பாரி 76
வேதவெற்பு 152
திருஞானசம்பந்தருக்கு முத்துச்சிவிகைகளும் முத்துச் சின்னங்களும் சிவபெருமான் அளித்தது 219
திருஞானசம்பந்தர் விடந்தீர்த்தது 221
வடவேங்கடம் 242

### திருப்புகழ் ஸ்வரம்.

கைத்தல நிறைகனி 154
பக்கரை விசித்ரமணி 172
முத்தைத்தரு 200
உனத்தினந்தொழுதிலன் 225
மன்றலங்கொந்துமிசை 243
கருவடைந் 261
எங்கேனும் ஒருவர் 155
வேதவெற்பிலே 155
ஒலமிட்ட சுரும்பு 173
தேனுந்து முக்கனிகள் 201
புமியதனிற் 226





சாந்தமில் மோகவெரி 244
வரிக்கலையினிகரான 261

### கந்தரலங்காரம்.

26 நீலச்சிகண்டி 7
27 ஒலையுந்தூதரும் 31
28 வேலேவிளங்கு 58
29 கடத்திற்குறத்தி 79
30 பாலென்பது 106
31 பொக்கக்குடிலிற் 128
32 கிளைத்துப்புறப்பட்ட 156
33 முடியாப்பிறவிக் 174
34 பொட்டாகவெற்பைப் 202
35 பத்தித்துறை 227
36 சுழித்தோடுமாற்றில் 245
37 கண்டுண்ட 262

சிவானந்த லஹரீ 11, 34, 60, 83, 107, 130, 158, 177, 205, 229, 247, 265

### கந்தர் திருவிளையாடல்.

பானுகோபன்வதம் 12
சிங்கமுகன்வதம் 35
சூரபன்மன் போர் 61
முருகவேள் விசுவரூபங்காட்டல் 84
சூரபன்மன் வதம் 108
திருப்பரங்கிரிக்கேகுதல் 131
தெய்வயானையம்மை திருமணம் 159
இந்திரனுக்கு முடிசூட்டல் 178
வள்ளியம்மையார் திருமணம் 206, 230, 248
கந்தகிரி யடைதல் 266

### கற்பு.

அம்பாசங்கரி 17
உபகோசை 41
கல்யாணி 65
மதுகரவேணி 88
மாமியும் மருகியும் 114
மருமகள் மனத்துயர் 135
அமிர்தமதி 163
சந்திரவதனி 181, 209
வலைஞனும் வலைச்சியும் 233
கற்புடைய மகளிர் கனவிலும் பொய் மொழியார் 253
வசந்தா 268

### பிற விஷயங்கள்

குருபக்தி 23, 47, 71
கல்வி 96
புரவலனும் இரக்கமுள்ள இரவலனும் 118
மயில்மேல் வந்தவாழ்வு 142
காசிவாசி சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள் தலைமையுரை 185, 212, 236
முருகரும் தமிழும் 255
எதுகைப் பழமொழிகள் 252, 278

## திருப்புகழமிர்தம் கிடைக்குமிடங்கள்.

அன்பர்கள் கீழ்க்காணும் விலாசங்களிலும் தங்கள் சந்தாவைச் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

திருப்புகழமிர்தம் பிரஸ், ஐயாமுதலி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.
திரு. செ. பாலசுப்பிரமணிய பிள்ளை, 25 மேலக்கோபுரத்தெரு, மதுரை.
ரா. ப. சாமிக்கண்ணு பிள்ளை, செட்டிபேட்டைத்தெரு, உறையூர்.
தி. கு. நல்லுசாமி பிள்ளை, புதுத்தெரு சந்து, ஆண்டார் வீதி, திருச்சி.
(பொன்மலை யன்பர்கள் இவரிடம் சந்தா செலுத்தவும்)
A. மாணிக்க முதலியார், திருத்தான்றோன்றி, உறையூர்.
திருப்புகழ் சுப்பராவ், போஸ்மேன், தெப்பக்குளம், திருச்சி.
வீ. சங்கரன் பிள்ளை, 251 தெற்குப் புதுத்தெரு, திருநெல்வேலி டவுன்.
மானேஜர், சைவப்பிரகாசம் பிரஸ், தூத்துக்குடி.
வெ. ராமசாமி ஐயர், பொத்தனூர்-வேலூர்.
பொ. முருக முதலியார், ஸ்ரீபாலசுப்பிரமணியவிலாஸ் ரைஸ்மில், மோகனூர்.
தே. பா. அ. அருணசலம் செட்டியார், துறையூர்.
அரு. லெ வெ. நடராஜன் செட்டியார், ராஜ வீதி, கோயம்புத்தூர்.
ஆதிநாராயண முதலியார், பட்டு ஜவுளிவியாபாரம், திருக்கச்சிநம்பி தெரு, [சின்ன காஞ்சீபுரம்.
ஜெ. மு. சாமி ஜவுளிக்கடை, நாகப்பட்டினம்.
த. வையாபுரி ஒதுவார், கலசபாக்கம்.
M. M. சிவராமன் செட்டியார், தாத்தையங்கார்பேட்டை.
ம. கு. முத்துவேல் முதலியார், மின்னல்.
மே. தொ. நாகப்ப முதலியார், வளைகுளம்.
M. குஞ்சிதபாதம் பிள்ளை, கிராம முன்சீப்பு, தஞ்சாவூர்
R. சுந்தரராஜ ஐயர், கிளர்க்கு, P. W. இன்ஸ்பெக்டர் ஆபீஸ், S. I. R. மாயவரம் ஜங்ஷன்.
லெ. சிவனு முதலியார், நூல் வியாபாரம், மெயின்ரோடு, அம்பாசமுத்திரம்.
முத்துராமசாமிசெட்டியார், மர்ச்சண்டு, கடைவீதி, பொள்ளாச்சி.
ஞானசம்பந்தம், கலாஞானசங்கம், கோயில் சந்து, சென்னிமலை
சுந்தரம் & கோ 50 குறுவைத்தெரு, கொழும்பு.
சிவ. மங்களமுடையார் பிள்ளை, 216 நாலாங் குறுக்குத்தெரு, கொழும்பு.
A. K. ராஜு செட்டியார், 19 வேதவிநாயகர் ரோடு, வேப்பேரி, சென்னை.
A. ஆறுமுக முதலியார், 18-A பள்ளித்தெரு, திருவண்ணமலை.
சச்சிதானந்தம் c-o B. K. விஸ்வநாத சர்மா, புத்தா கிருஷ்ணயர் & சன்ஸ் பெண்ணடம் வெங்கட்டராமையர் தெரு, சேலம்.

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்



" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் மூள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்."

மலர் 6. Vol 6. | விஷு சித்திரை மீ 1 உ ஏப்ரல் 1941 | இதழ் 1 No. 1

## திருப்புகழ்.

### திருவேரகம் (சுவாமிமலை)

குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு மணியேயென்
றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதின முனேயோதும்
அமலை அடியவர் கொடிய வினேகொடு
மபய மிடுகுர லறியாயோ
திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா
நமனை யுயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் குருநாதா
நளின குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே.

## பதவுரை.

திமிர எழுகடல் - இருள் நிறைந்த ஏழுகடல்களும், உலகம் - பூவுலகமும், முறிபட - அழிந்து போகுமாறும், திசைகள் பொடிபட - எட்டுத் திசைகளும், பொடிபட்டழியவும், வரு சூரர் - போர்க்களத்திற்கு வந்த சூராதி யவுணர்கள், சிகரமுடி உடல் - மகுடங்களைத் தரித்த தலைகளும் உடல்களும் அற்று, புவியில் விழ - பூமியில் விழும் வண்ணம், உயிர் திறை கொடு - அவர்களுடைய உயிரை அரசர்க்குரிய திறைப்பொருளாக வாங்கிக் கொண்டு, அமர் பொரும் - போர் செய்த, அயில் வீரா - வேற்படையை யுடைய வீரரே! நமனை - கூற்றுவனை யுதைத்து, உயிர் கோளும் - அவனுடைய உயிரைக் கவர்ந்த, அழலின் இணை கழல் - நெருப்பனைய மலர்ப்பாதரும், நதி கொள் சடையினர் - கங்கையை முடித்த சடைமுடி யுடையவரும் ஆகிய சிவபெருமானுக்கு, குருநாதா - குரு மூர்த்தியே! நளின குருமலைமருவி அமர்தரு - நீர்வள மிகுந்த சுவாமிமலையில் பொருந்தி எழுந்தருளியுள்ள, நவிலு மறை புகழ் - நன்னெறிகளைச் சொல்லுகின்ற வேதங்களாற் புகழப் பெறுகின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! குமர - குமாரக் கடவுளே, குருபர - குருவாக நின்று அருள்புரியும் பெரிய பொருளே! முருக - முருகப் பெருமானே! சரவண - சரவணத்தில் தோன்றியவரே! குக - குகையில் வீற்றிருப்பவரே! ஷண்முக - ஆறுமுகக் கடவுளே, கரி பிறகு ஆனகுழக - விநாயகக் கடவுளுக்குத் தம்பியாக வந்த அழகரே! சிவ சுத - சிவகுமாரரே! சிவயநம என - "சிவாயநம" என்னும் ஐந்தெழுத்தை அன்புடனே ஓதுமவர்கட்கு, குரவன் அருள் - குருபரனாக வந்து அருள்புரியும், குருமணியே என்று - குருநாயகரே! என்று துதித்து, அமுத இமையவர் - அமுதத்தைப் பெற விரும்பிய தேவர்கள், திமிர்தம் இடுகடல் அது என - திமிர்தம் என்று பேரொலியுண்டாகுமாறு கடைந்த கடலைபோல, அநுதினம் - நாள்தோறும், உனை ஓதும் - தேவரீரை யழைத்துச் சொல்லும், அமலை அடியவர் - மிகுந்த அடியார்கள், கொடிய வினை கொடும் - முன் செய்த வினைகளின் கொடுமையால் வருந்தியும், அபயம் இடுகுரல் அறியாயோ - அபயமிடுகின்ற குரலைத் தேவரீர் இன்னார் குரல் என்று தெரிந்து கொள்ள வில்லையோ?

## பொழிப்புரை.

பொருள் நிறைந்த ஏழு சமுத்திரங்களும், பூவுலகமும் கலங்கவும், எட்டுத் திசைகளும் பொடிபட்டழியவும் வந்த சூரபன்மன் முதலிய அவுணர்களுடைய முடியை யணிந்த தலைகளும் உடல்களும் அற்று மண்ணில் விழுந்துருளும் வண்ணம் உயிரைத் திறைப்பொருளாகக் கொண்டு போர்புரிந்த வேல் வீரரே! இயமனுடைய உயிரைக் கவர்ந்ததும், நெருப்பனையதும் ஆகிய திருவடியை யுடையவரும், கங்கையை முடித்த சடையை யுடையவரும் ஆகிய சிவபெருமானுக்கு உபதேசித்த குருநாதரே! நீர்வளமிக்க சுவாமிமலையில் எழுந்தருளி யுள்ளவரும், நன்னெறிகளைக் கூறும் வேதங்களால் புகழப் படுகின்றவருமாகிய பெருமித முடையவரே! குமாரக் கடவுளே! குருபரரே! முருகப் பெருமானே! சரவணபவரே! குகமூர்த்தியே! ஆறுமுகத்தரசே! விநாயகருக்கு இளையவராகவந்த பேரழகுடையவரே! சிவபுதல்வரே! "சிவயநம" என்னும் பஞ்சாட்சரத்தைக் கூறும் மெய்யன்பருக்கு குருமுகமாக வந்து அருள்புரியும் குருநாயகரே! என்று துதித்து; அமிர்தத்தை விரும்பிய தேவர்கள் "திமிர்த" என்ற ஒலியுண்டாகுமாறு கடைந்த பாற்கடலின் பேரொலியைப் போல் நாள்தோறும், தேவரீரை அழைத்து எண்ணில்லாத அடியார்கள் முன்னை வினையால் வருந்தியும் "அபயம்" என்று கதறும் குரல் இன்னாருடையதென்று அறியீரோ?



## விரிவுரை.

**குமர:—**

என்று மகலாத இளமையுடையவர்.

**குருபர:—**

குருவாக உள்ளவர் யாவர்க்கும் முதன்மை பெற்றவர் முருகவேளே யாகும். அவரை குருவாகக் கொண்டவரே மெய்ப் பொருளை யுணர்வார். சனகாதி நால்வர்கட்கும் குறியினால் உண்மை நிலையை யுணர்த்திய தென்முகப் பரமாசிரியருக்கும் ஒரு மொழிப் பொருளை முருகவேள் உணர்த்தியதனால், அவரே ஆதி குருபரராம்.

**முருக:—**

சுப்ரமண்ய கடவுளுக்குடைய திருநாமங்களுள் முருக நாமமே முதன்மையானது. அநேக நாமங்களைக் கூறுவதனால்

வரும் பயன்கள் அத்தனையும் முருகநாமம் ஒன்றால் வரும். பல நாமங்களால் கிடைக்கும் பொருள் யாவும் இம்முருக நாமம் ஒன்றால் கிடைக்கின்றது. அதனாலேயே

"மெய்ம்மைகுன்றா மொழிக்குத்துணை
முருகா வெனு நாமங்கள்"

என்று பன்மையாகக் கூறுவாராயினர்.

நக்கீரதேவரும், "முருகா என்று ஓதுவார் முன் அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும், வெஞ்சமரந் தோன்றில் வேல் தோன்றும், நெஞ்சில் ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்" என்று உபதேசித்தனர்.

"முருகா எனவோர் தரமோ தடியார்
முடிமே லிணைதாள் அருள்வோனே"

இன்னும் முருக நாமத்தின் பெருமையை தக்கார்வாய் கேட்டுணர்க. விரிப்பிற் பெருகும்.

### சரவண:—

சரவண தடாகத்தில் எம்பெருமான் மூவர் தேவாதிகள் பொருட்டுத் தோன்றினதால் இப்பெயர் உண்டாயிற்று.

### குக:—

முருகக்கடவுள் குறிஞ்சி நிலக்கடவுள் ஆதலின் மலைக் குகையில் உறைபவர் என்றும், ஆன்மாக்களின் இதயகுகையில் உறைபவர் என்றும் பொருள்படும்.

### ஷண்முக:—

ஸர்வஞ்ஞத்வம், திருப்தி, அநாதிபோதம், ஸ்வதந்திரம், அலுப்த சக்தி, அநந்த சக்தி, என்ற ஆறுகுணங்களே எம்பெருமானுக்கு ஆறுமுகங்களாம்.



"ஏவர்தம் பாலுமின்றி எல்லைதீ ரமலற்குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்ததென்ன
பூவியல் சரவணத்தண் பொய்கையில் வைகுமையன்
ஆவிகட் கருளுமாற்றால் அறுமுகங் கொண்டானன்றே"
—கந்தபுராணம்.

### சிவய நம:—

இது சூக்கும பஞ்சாக்கரம். இதனை அன்போடு ஜெபித்துத் திருநீற்றை யணிந்தால் சிவபெருமான் உடனே சிவகதியைத் தருவார்.

"திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபாதிரிப்புலி யூரனே"
—அப்பர்.

இதனை நாடோறும் சிந்திப்பார்க்கு எல்லாத் துன்பங்களும் நீங்கி இன்ப மெய்தும்.

"சிவாயநம வென்று சிந்தித் திருப்பார்க்
கபாய மொருநாளு மில்லை"
—ஔவை

இத்தகைய மகாமந்திரத்தை ஜெபிக்கின்றவர்க்கு முருகன் குருவாக வந்து அருள் புரிவர்.

### அமலையடியவர்........அறியாயோ:—

எண்ணிறந்த அடியார்கள், குமரா! முருகா! குகா! சரவண! குருபரா! அறுமுகா! என்று தேவர்கள் கடைந்த காலத்தில் பாற்கடலில் உண்டாகிய பேரொலியைப் போல், ஓலமிட்டு துதித்து முறையிடும் முறையை எங்கும் நிறைந்த தேவரீர் அறிவீர். ஆதலின், உடனே அடியார்க்கு அருள்புரிவீர் என்பது குறிப்பு.

### திமிர எழுகடல்:—

கடல் ஆழமிகுதியால் கருநிற முற்றிருப்பதால் இருளோங்கிய கடல் என்றனர். எழுகடல்களாற் சூழப்பெற்ற உலகம் என்று கூறினும் பொருந்தும்.

குருநாதா:—

கு - அஞ்ஞான இருள் ரு - நீக்குபவர்; அஞ்ஞானமாகிய இருளை நீக்குபவர் குருவெனப்படுவர்.

"குசப்தஸ்த்வந்தகாரஸ்பாத் ருசப்தஸ்தந்நிரோதக:!
அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதியதே!!"
"குருரேவ பரம் ப்ரஹ்ம."
—அத்வயதாரகோபநிஷத்

இத்தகைய குருவென்பவர் அனைவருக்கும் முருகனே முதல்வர் ஆதலின் குருநாதா என்றனர்.

கருத்துரை.

வேல்வீர! சிவகுருநாத! சுவாமிமலைத் தலைவ! குமர! குருபர! முருக! சரவண! குக! என்று துதித்து அமிர்தமதன காலத்தில் கடலில் எழுந்த ஒலிபோல் முறையிடும் அடியார்களுடைய குரலைக் கேட்டு அருள்புரிவீர்.





ஓம் குஹாய நம:

# கந்தரலங்காரம்

(மலர் 5 - 272 ம் பக்கத் தொடர்ச்சி)

(26) நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே.

பதவுரை.

நீல சிகண்டியில் - நீலநிறமுள்ள மயில்வாகனத்தின் மேல், ஏறும் பிரான் - ஏறுகின்ற பெருமானாகிய குமாரக் கடவுளும், கோல - அழகு மிக்க, குறத்தியுடன் - வள்ளியம்மையாருடன், எந்த நேரத்திலும் - அடியேன் விரும்புகின்ற எந்த வேளையிலும், வருவான் - வந்து அருள்புரிபவரும், குருநாதன் - அடியேனுடைய குருமூர்த்தியுமாகிய எம்பெருமான், சொன்ன - உபதேசித்த, சீலத்தை - மெய்ப்பொருளின் தன்மையை, மெள்ள - மெல்ல, தெளிந்து - தேர்ந்து, அறிவார் - தெரிந்து கொள்பவர்களாகிய, சிவயோகிகளே - சிவயோகிகள் மாத்திரமே, காலத்தை வென்று இருப்பார் - காலதத்துவத்தை வென்று அதனைக் கடந்து காலாதீதராக இருப்பார்கள்; வெறும் கர்மிகள் - வெறுமையாகிய கர்மயோகிகள், மரிப்பார் - காலத்துக்கு உட்பட்டு மாய்ந்து போவார்கள்.

விரிவுரை.

நீலச்சிகண்டி:—

மயிலினுடைய கழுத்து நீலநிறத்தை யுடையது. மயிலின் தோகைக்குச் "சிகண்டம்" என்று பெயர்; அதனையுடைய மயிலுக்கு ஆகு பெயராய் சிகண்டி என்ற பெயருண்டாயிற்று.

## பிரான்:—

பிரான் என்பது பிரியான் என்பதன் மரூஉ. எப்பொருட்கண்ணும், யாண்டும் பிரியாதிருப்பவன் என்பது பொருள். இதன் பெண்பால் பிராட்டி, பிரான் என்பதற்குப் பெரியவன் என்று பொருள் கூறுவாருமுளர்.

## எந்த நேரத்திலும்:—

முருகப் பெருமான் அழகிய வள்ளிநாயகியாருடன் அருணகிரிநாதர் நினைக்கும் போதெல்லாம் வந்து காட்சி தருவார் என்பது இதனால் விளங்குகின்றது. எந்த நேரமாயினும் வருவார் என்பதுமட்டுமன்று; எங்கே நினைக்கினும் அங்கெல்லாம் வந்து காட்சி தருவர் என்பதும் அடியிற் கண்ட திருவாக்காற் றெரிகின்றது.

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிறைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கே என் முன்வந்து எதிர்நிற்பனே.
—அலங்காரம்.

எந்த நேரத்திலும் என்பதனை கோல என்ற சொல்லுடன் கூட்டி எப்பொழுதும் அழகாக இருப்பவன் என்று கூறுவோர் கூற்று சிறப்புறுது.

## கோலக்குறத்தி:—

கோலம் - அழகு. சிறந்த அழகுடைவர் வள்ளியம்மையாரே யாவர்; மரகத மேனியும், பவளவாயும் உடையவர்.

"சுந்தர ஞான மென் குறமாதே"
—திருப்புகழ்.

## குருநாதன்:—

சிவபெருமானுக்கும் அகத்திய முனிவருக்கும் குருமூர்த்தியாகிய கந்தக் கடவுள் அருணகிரியாருடைய செவியிலும் ஞானோபதேசஞ் செய்தனர்; ஆகலின் அருணகிரிநாதர் தனக்குக் குருநாதன் முருகனே என்று உணர்த்துகின்றார்.



"எட்டிரண்டு மறியாத என் செவியில்
எட்டிரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்த குரு
முருகோனே"

"சுகஞானக் கடல் மூழ்கத்தந்
தடியே னுக்கருள் பாலித்துஞ்
சுடர்பா தக்குக னேமுத்தின் கழல்வீரா"
—திருப்புகழ்.

## சீலம்:—

முருகவேள் உபதேசித்த மெய்ப்பொருள்.

## மெள்ளத் தெளிந்தறிவார்:—

அமைதியுடன் இருந்து ஆராய்ந்து அறிபவர்கள். மனம் சாந்தியடைந்தவர்கட்கு அது புலனாகும்.

## சிவயோகிகள்:—

முருகவேள் அருணகிரிநாதருக்கு உபதேசித்த அருள் உபதேசப் பொருளை அறிவதற்குரியவர் சிவயோகிகளே யாவர். (ஏ-பிரிநிலை)

சிவயோக லக்ஷணத்தை,

"செனித்த காரியோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறெ னுடல்வேறு . . . . .
செகத்தியாவும் வேறாக நிகழ்ச்சியா மனோதீத
சிவச்சொரூப மாயோகி எனஆள்வாய்".

என்ற திருவானைக்காத் திருப்புகழாலும்,

"ஐந்து பூதமும் * * * * *
அதன் சொரூபமதாக வுறைவது சிவயோகம்"

என்ற விராலிமலைத் திருப்புகழாலும் தேர்ந்து தெளிக.

## காலத்தை வென்றிருப்பார்:—

காலம் என்ற ஒன்றுக்கு மாலயனாதி வானவரும் உட்பட்டவரே யாவர். மேற் கூறிய சிவயோகிகள் காலத்தை வென்று

நித்தியத்துவத்தைப் பெறுவார்கள்; என்றும் ஒரு படித்தர யிருப்பர்.

மரிப்பார் வெறுங்கர்மிகளே:—

ஞானநெறியை நாடாது வெறுங் கன்மத்தை யநுசரிப்பவர் காலத்திற் குட்பட்டு மடிவர்.

கருத்துரை.

குமாரக் கடவுள் கூறியருளிய மெய்ப்பொருளை யுணர்ந்தவர் இறவார்; ஏனையோர் இறப்பர்.



திருத்தணிகேசன் துணை :

திருப்புகழ் அமுத வாழ்த்து.

வாழிய நல் லறவோர்கள் வானவ ரானினங்கள்
வாழிய செங்கோல் வேந்தர் வாழியவை யகமும்;
வாழிய செவ் வேற்குமரன் பாதமலர் மறவா
மனம்பெற்ற திருநிறைக்கு பாநந்த வாரி
வாழியநந் தமிழுலகம் நல்வழியைப் பற்ற
மற்றவர்தாம் ஊரூர் செய் பிரசங்க மழையே;
வாழிய மாதந் தோறும் வெளிவந்து நன்மை
வளர்த்துதிருப் புகழமுத வெளியீடென் ஞான்றும்.

ராவ்பகதூர்
வ. சு. செங்கல்வராயப் பிள்ளை M. A.

292. லிங்கிசெட்டித் தெரு.

1-1-1941.

ஓம் குஹாய நம:

# சிவாநந்தலஹரீ

(259-வது பக்கத் தொடர்ச்சி)

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(73) பூதாரதாமுதவஹத்யதபேக்ஷயா ஸ்ரீ
பூதார ஏவ கிமத: ஸுமதே லபஸ்வ!
கேதாரமாகலிதமுக்திமஹௌஷதீனாம்
பாதாரவிந்தபஜநம் பரமேச்வரஸ்ய!!

பதவுரை.

| | |
|---|---|
| ஸுமதே | — என்னுடைய நல்ல அறிவே! |
| யதபேக்ஷயா | — யாதொரு திருவடியைக் காண வேண்டுமென்கிற எண்ணத்தினால், |
| ஸ்ரீ பூதார ஏவ | — மலர்மகளையும், நிலமகளையும் மணவியராக உடைய நாராயண மூர்த்தியே, |
| பூதாரதாம் | — பன்றியாயிருத்தலை |
| உதவஹத் | — அடைந்தாரோ? |
| அத: | — இதைக்காட்டிலும், |
| கிம் | — என்ன? (வேறுஇருக்கிறது) ஆதலால் |
| ஆகலித முக்தி மஹௌஷதீ நாம் | — விரும்பப் பட்டிருக்கிற மோட்சமாகின்ற உயர்ந்த மூலிகைகளுக்கு, |
| கேதாரம் | — விளைநிலமாயிருக்கின்ற |
| பரமேச்வரஸ்ய | — மகேச்வரருடைய |
| பாதார விந்த பஜநம் | — திருவடித் தாமரைகளுடைய சேவையை |
| லபஸ்வ | — அடைவாயாக. |

பொழிப்புரை.

ஏ புத்தியே! திருவடியைக் காணவேண்டுமென்ற அன்பினால் திருமகள், நிலமகள் என்ற இருவரை மணந்த திருமாலே பன்றி யானாரோ? இதனினும் வேறு என்ன இருக்கிறது? ஆதலால், விரும்பப் படுகின்ற மோட்சமாகின்ற மூலிகை விளையும் நிலமாக விளங்குகின்ற சிவமூர்த்தியின் திருவடிகளை நீயும் வணங்கி வாழ்த்துவாயாக.

உ

ஓம் குஹாய நம :

# கந்தர் திருவிளையாடல்

(5-வது மலர் 280-வது பக்கத் தொடர்ச்சி)

சூரபன்மன் இவ்வாறு துயருறும் பொழுது, மறுநாட்காலையில் ஒற்றுவர் சிலர் அதனைக் கண்டு பானுகோபனிடத்திற் சென்று "அரசகுமார! நீ விட்ட மாயப்படைக்கலத்தால் நன்னீர்க் கடலில் வீழ்த்தப் பெற்ற வீரவாகுதேவர் முதலியோரை முருகன் வேலால் மீட்டனர். அக்கினிமுகன், மூவாயிரர், தருமகோபன், நால்வகைப்படை முதலிய யாவரும் அழிந்தனர்; இரணியன் மீனுகி ஒளிந்தான். நின் தந்தை வெந்துயர் கொண்டனன்" என்று கூறினர்கள். பானுகோபன் கேட்டு மானமும், கோபமும், துக்கமுங் கொண்டு, எழுந்து பிதாவினிடம் வந்து வணங்கி, "தந்தையே! நான் கூறும் உறுதிமொழிகளைக் கேள். யான் மாயப்படையினுல் கடலில் வீழ்த்திய வீரவாகு முதலியோரை வேற்படையால் கணப்பொழுதில் மீட்ட பாலகனை வெல்வது கனவிலும் முடியாது. முதனுள் போர்செய்து வில்லம்புகளை யிழந்து வறிதே புறந்தந்தனை. இன்றேல் அழிந்திருப்பாய். மாயோன் சக்கரத்தை மாலையாகத் தரித்த தாரகனையும் கிரௌஞ்ச மலையையும் அழித்த வேற்படையை எதிர்ப்பார் யாவர்? பாலகனுகிய முருகன் முனிந்தால் அண்டங்கள் அனைத்தையும் அழிப்பன். வலிமை பெற்ற புதல்வர்களை யிழந்தனை. உனக்கும் எனக்கும் இயமன் குறிபார்த்து நிற்கின்ருன். ஆதலால், தேவர் சிறையை விடுத்து உய்வு பெறுவாய்" என்ருன்.

சூரன் கேட்டு சினந்து, "பேதாய்! நின் மந்திரம் நன்று; புகழ் ஒன்றே நிலைத்து நிற்கும்; சூரன் என்று பேர் பெற்ற நான் பிடித்த சிறையை ஒருபோதும் விடேன். நிலையற்ற வாழ்வை



நச்சி அழியாப் புகழை யிழக்கமாட்டேன். மூவரையுந் தேவரையும் அடக்கினேன். முழுமுதற் கடவுளாம் முக்கட் பெருமான் வரபலமுடையேன். உயிரை விடினும் தேவர் சிறையை விடுகிலேன். அஞ்சுகின்ற நீ நின் வீடுபோய் தூங்குவாய். போருக்கு யான் செல்வேன்" என்று கூறினுன். பானுகோபன் இவற்றைக் கேட்டு, "என் தந்தைக்கு உய்புந் திறமில்லை போலும்; வினையை வெல்வார் யாவர்" என்று எண்ணி உரைப்பானுயினுன். "பிதாவே! சிறியேன் அறிவில்லாமற் கூறிய புன்மொழியைப் பொறுத்தருள்க; யான் சென்று வீரவாகுவையும் பூதகணங்களையும் கொல்வேன்" என்று கூறி, அவன்பால் விடைபெற்றுக் கொண்டு துன்பத்தோடு மீண்டு, தன் கோயிலை யடைந்து பல தேவர்களுந் தந்த படைக்கலங்கள் யாவையும் எடுத்துக் கொண்டு கவசம் தூணி முதலியவைகளைக் கட்டிக் கொண்டு ஒரு பொற்றேரிலேறிப் புறப்பட்டான். அளவற்ற அவுணசேனு வெள்ளங்கள் சூழ்ந்தன. பானுகோபன் போர்க்களம் வந்து, இறந்து கிடந்த தம்பியரைக் கண்டு இரங்கி, அழுது துன்பமுற்ருன். மனங்கொதித்து "வீரவாகு முதலியோரைக் கொல்வேன்" என்று சபதங் கூறினுன்.

இருதிறப் படைகளும் எதிர்த்து அமராடின. பூதரால் அவுணரும் பலர் இறந்தனர்; அவுணரால் பூதரும் பலர் இறந்தனர். உதிர ஆறு ஓடியது. பிணமலைகள் விண்ணை மறைத்தன. தன் சேனைகள் அழிவதைக் கண்ட பானுகோபன் சினமுற்று அம்பு மழைகளைச் சிந்தி பூதர்களைச் சின்னபின்னஞ் செய்தான். பூதர்கள் தோற்றேடினர். அதனைக் கண்ட வீரவாகு தேவர் முருகவேளைத் தியானித்து முன்னணிக்கு வந்து வில்லை வளைத்து கணைமழை பொழிந்து அவுணசேனைகளை யழித்தார். அவுணர் இரிந்தார்; பானுகோபன் அது கண்டு வீரவாகுதேவர் திருமுன் வந்து "தூதனே நின்னை யின்று கொல்வேன்" என்று ஆயிரங் கணைகளை விடுத்து அவர் மார்பைத் துளைத்தான். வீரவாகுதேவர் சிறிது வருந்தி பானுகோபன் புயத்தில் ஆயிரங் கணைகளை யழுத்தினர். பானுகோபன் உடல் வருந்தி நூறுகணை

களால் அவர் வில்லைத் துணித்தான். வீரவாகுதேவர் ஒரு வேலை விட அது அவன் நெற்றியைத் துளைத்தது. உதிரம் பெருகியது. பானுகோபன் ஒரு கணம் அறிவிழந்து நின்றான். வீரவாகு தேவர் விரைவில் வேறொரு வில்லை யெடுத்து வாயு, அக்கினி, சூரியன், பிரமன், விட்டுணுப் படைக்கலங்களை யேவினார். பானுகோபனும் அவ்வப்படைக்கலங்களை யேவி மாற்றினான். பானுகோபன் பின் ஒரு மாயையால் மறைந்து கணைமழையைப் பொழிந்தான். வீரவாகுதேவர் திருமேனியில் உதிரம் பெருகியது. தேவர்கள் கண்டு அஞ்சினார்கள். வீரவாகுதேவர் ஞானாஸ்திரத்தை விடுத்தார். பானுகோபன் மாயம் ஒழிந்து விண்ணில் வெளிப்பட்டு நின்றான். வீரவாகுதேவரும் தேருடன் ஆகாயத்திற் சென்று கணைகளைச் சொரிந்தார். நீரும் நெருப்பும் மாறிப் போராடுவதுபோல் இருவரும் போர் செய்தார்கள். அவர்களுடைய தேர்களிரண்டும் ஓ ரிறைப்பொழுதினுள் ஆயிர நூறு கோடி சாரிகைகள் திரிந்தன. அவர்கள் விடும் பாணங்கள் எங்கும் திரிந்தன. இருவரும் சிரிப்பர்; சினமடைவர்; புகழ்வர்; இகழ்வர். கடல்கள் வற்றின; மேகங்கள் கரிந்தன; திக்கஜங்கள் எரிந்தன; உடுக்கள் பொரிந்தன; அண்டங்கள் வெடித்தன.

அவர்களுடைய அமர்த்திறத்தைக் கண்டு அமரரும் ஏனோரும் இறும்பூதுற்று, "இவரைப் போலப் போர் செய்தவர் யாவருளர்? இவருக்கிணை யாவருளர்?" என்று புகழ்ந்தார்கள். பானுகோபன் ஆயிரங்கணைகளால் வீரவாகுதேவர் தேரைப் பொடிபடுத்தி ஆர்த்தான். வீரவாகுதேவரும் ஆயிரங் கணைகளால் பானுகோபன் தேரைத் துகளாக்கினார். பானுகோபன் நஞ்சு பாய்ச்சி 25 கணைகளால் வீரவாகுதேவர் மார்பைத் துளைத்தான். வீரவாகுதேவர் 14 கணைகளால் அவனுடைய கிரீடத்தை அழித்தார். பானுகோபன் 14 கணைகளால் அவருடைய கவசத்தை யறுத்தான். வீரவாகுதேவர் சிரித்து ஏழு கணைகளால் அவனுடைய வில்லைத் துணிந்தார். பானுகோபன் மிகவுங் கோபித்து பிரமதேவர் தந்த வேற்படையை விடுத்தான். வீரவாகுதேவர் ஆயிரங்கோடி பாணங்களை ஏவ, அது அவைகளைப்



பொடிபடுத்தி வர, வீரவாகுதேவர் கந்தக்கடவுளைத் தியானித்து சிவபெருமான் தந்த வாட்படையை எடுத்து அதனை வெட்டினார். தேவர் கூத்தாடினார்கள். வாளை உறையிலிட்டார். பானுகோபன் வாளை யுருவி சிங்க ஏறுபோல் பாய்ந்து வீரவாகு தேவருடைய வில்லைத் துணித்தான். "இவன் இறந்தால் போர் முடிந்தது" என்று தேவர்கள் உரையாடினார்கள்.

வீரவாகுதேவர் தனது வாளை எடுத்து எதிர்த்தார். அக்கினியும் இயமனும் போராடுவதைப் போல் இருவரும் வாட்போர் செய்தனர்; கால் கைகளைத் துணிக்கக் குறிவைத்து வாளை வீசுவர்; விலக்குவர்; சூறைக்காற்றுபோல் சுற்றுவர். பானுகோபன் தான் கற்ற வாள்வித்தையின் வலியால் வீரவாகு தேவருடைய வாளை விலக்கி அவருடைய தோளில் வெட்டினான். அவருடைய தோளினின்றும் உதிரவெள்ளம் பெருகியது. பானுகோபன் செருக்குற்றான். தேவர்கள் நடுங்கினார்கள். வீரவாகுதேவர் வேலாயுதக் கடவுளைத் தியானித்து பானுகோபனுடைய வலத் தோளைத் துணித்தார். அவன் தன் வலக்கையோடு வீழ்கின்ற வாட்படையை இடக்கையாற் பறித்து, அடங்காத கோபத்துடன் எதிர்த்தான். வீரவாகுதேவர் இடத்தோளையும் வெட்டித் துணித்தார். பானுகோபன் மாயப்படையை விட நினைக்கும் போது உடனே வீரவாகுதேவர் அவனுடைய தலையை அறுத்தார். பானுகோபனுடைய தலையும் புயங்களும் உடம்பும் மண்ணில் வீழ்ந்தன. அவன் இறந்தான். முனிவரும் தேவரும் ஆடிப்பாடினார்கள். தேவர்கள் வீரவாகுதேவர் மேல் பூமழை பொழிந்தனர்; கதிரவன் கவலை தீர்ந்தான்.

வீரவாகுதேவர் மகிழ்ந்து மண்டலத்தில் வந்து, துணைவர்களை நோக்கி, நமது சபதம் முடிந்தது; முருகவேளைச் சேவிப்போம் "என்று துணைவர்களும் பூதர்களும் சூழப் பாசறையிற் சென்று, கந்தவேள் கழலிணைகளிற் பலமுறை பணிந்து எழுந்தார். முருகக் கடவுள் "தம்பியே! பானுகோபனை வருந்தி வதைத்தனை. மகிழ்ந்தோம். வேண்டிய வரத்தை விரைந்து வேண்டுதி" என்று அருளிச் செய்தார். வீரவாகுதேவர்,

"கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சாலநின் பதத்தன்பையே வேண்டுவேன் தமியேன்"

எம்பெருமானே! இந் நல்வரத்தை முனிவருந் தேவரும் பெறுகிலர். இதனைத் தந்தருள்வீர் "என்று வேண்ட, எந்தை கந்தவேள் "உனக்கது தந்தனம்" என்று அருளிச் செய்தார். துணைவருக்கும் அருள் புரிந்து இருக்கை போக விடை கொடுத் தனுப்பினர். வீரவாகுதேவராதியோர் தத்தம் உறைவிட மேகி னார்கள்.

தூதர்கள் ஓடி பானுகோபன் இறந்ததை சூரனிடம் அழுது கொண்டே கூறினார்கள். சூரன் கேட்டு துன்பக்கடலில் வீழ்ந்து, புரண்டு, புலம்புவானாயினன். "என் மைந்தனே! எந்தையே! சிந்தைக்கினிய தெள்ளமுதே! புத்திரர் பலர் இறந்தும் நீ ஒரு வன் இருக்கின்றாயென்று உள்ளம் உவந்தேன். நினது நல்லுரை யைக் கேளாமையால் கெட்டேன். தேவர் மகிழ்ந்தனரோ? நினக்குப் பயந்திருந்த திருமால் இனி உறங்குவான். நீ சென்ற உலகிற்கு வந்தாயினும் நின் மதுர மொழியைக் கேட்பேனோ? நின்னாற் சிறைப்பட்ட ஆரிடன் பயம் நீங்கி யிருப்பான். சாகா வரம் பெற்றதால் உன்னுடன் யானும் சாக முடியவில்லை. அந்தோ! என் ஆருயிர் மகனே! ஒடிவாராய். எங்குற்றாய்? என் செய்வேன்? என்று பலவாறாகக் கதறி யழுதான்.

சூரன் மனைவியாகிய பதுமகோமளை, பெண்கள் பலருடன் ஓடிவந்து வெட்டுண்ட மகன்மேல் விழுந்து, "மகனே! மகனே!!" என்று புலம்பினாள். சூரபன்மன் ஒருவாறு தேறி, "என் பகை வரை இன்றைக்கே கொன்று அவர்களுடைய உதிரத்தைச் சொரிந்து ஒரு வேள்வியைச் செய்து என் மகனை எழுப்புவேன்; அவனுடைய உடம்பைச் சேமித்து வையுங்கள் என்றான். ஏவலர் கள் அவ்வண்ணமே செய்தார்கள்.

(தொடரும்)

உ

ஓம் குஹாய நம:

# கற்பு.

(6-வது மலர் 287- வது பக்கத் தொடர்ச்சி)

அம்பாசங்கரி மாலை 5-மணிக்கு வீதியில் விளையாடிக் கொண் டிருந்தாள். அவளுக்கு வயது சரியாக 9. அன்று விடுமுறை நாளாதலால் மணல் வீடு கட்டிக் கொண்டிருந்தாள். அவளோடு மின்னற் கொடிபோன்ற இளஞ்சிறுமிகளும் விளையாடிக் கொண் டிருந்தார்கள். அவ்வழியே சிவகுரு என்ற சிறுவன் விரைந்து வந்தான். அவன் வருங் குறிப்பு மணல் வீட்டை அழிப்பதற் காக என்றுணர்ந்த அம்பாசங்கரி

கானக் குறப்பெண் குடியிருந்த கன்னிப் புனத்துத் திணைமாவுங்
கமழ்தேன் தெளிவும் உண்டுசுவை கண்டா யென்றே மதுவல்லால்
மீனத் தடங்க ணவள்மிச்சில் மிசைந்திட் டதுவு நசைமிக்கு
விரைத் தீங்குமுதத் தமுதடிகள் விருந்தா டியதும் விண்டோமோ
கூனற் பிறையின் கோடுரிஞ்சும் கொடிமா டத்து வெயில்விரிக்குங்
குருமா மணியாற் சுரநதியிற் கொழுந்தா மரைக்கண் முறுக்குடைந்து
தேனக் கலருஞ் சோணாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

என்று தேனினுமினிய திங்குரலாற் பாடினாள். அம்மதுரத் தமிழ்ப் பாடலைக் கேட்ட சிவகுரு அம்பாசங்கரியைக் கண்டு ஒரு சிரிப்பு சிரித்து விட்டு ஓடினான். மேற்கடலில் வெய்யவன் வீழ்ந்தான். அம்பாசங்கரி வீட்டிற்கு வந்து கைகால்களைத் தூய்மை செய்து கொண்டு திருநீறு தரித்து விளக்குக்கு முன் இருந்து பழையபாடங்களைப் படித்துக் கொண்டிருந்தாள். அவள் மனதில் சிவகுரு மணல் வீட்டைக் கலைக்கவந்த விரைவும், தான் பாடிய செந்தமிழ்ப்பாடலைக் கேட்டு அவன் மகிழ்ந்து

சென்றதும் மனக்கண்ணில் காட்சியளித்தன. "ஆ! ஆ!! என்னே தமிழ்க்கவியின் பெருமை? அதன் ஆற்றல், பொருளழகு, சொல்லழகு எத்தனை உயர்வு? எதிர்ப்பாரையும் வணங்கச் செய்யும் தமிழின் இனிமைதான் என்னே?" என்று சிந்தித்து வியந்தாள்.

அம்பாசங்கரிக்கு வயது 14 ஆயிற்று. மலர்வுற்றாள். மலர் மகளைப் போன்ற வனப்பும் இயற்கைப் பொலிவும் விளங்க கற்பகக் கொடிபோல் காணப்பட்டாள். தாய் தந்தையர் மகளுக்குத் திருமணஞ் செய்ய முயன்றனர். முன்னை வினைப்பயனும் முருகவேள் திருவருளும் முன்னிற்க, சிவகுருவுக்கும் அம்பாசங்கரிக்கும் திருமணம் நிகழ்ந்தது. தனியே இருந்து இருவரும் இல்லறமாகிய நல்லறத்தை நடாத்துவாராயினர். கருத்தொருமித்து காதலாகி ஒருவர் உள்ளத்தில் ஒருவர் மாறிப் புகுந்து இன்புற்றனர். அம்பாசங்கரி, நாள்தோறும் கதிரவனுதிக்கு முன் எழுந்து நீராடி திருநீறும் குங்குமமும் தரித்து, கணவன் எழுந்தவுடன் அவனடியிற் பணிவாள். காலை உணவைத் தயார் செய்துத் தருவாள். கணவன் உடல் நிலைக்குத் தக்கவாறு பகல் உணவைச் செய்வாள். சிவகுரு காலைக்கடன்களை முடித்துக் கொண்டு கடைக்குப் போவான். அவனுக்கு நிலக்கடலை வியாபாரம். வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்து அதனால் பெரும் பொருளை ஈட்டினன். அவனிடம் பலர் பணியாளராக இருந்தார்கள். எல்லோரிடத்திலும் இனிமையாகப் பேசுவான். வியாபாரிகளிடம் உண்மையாக நடந்து கொள்வதால் அவனிடம் யாபேருக்கும் நம்பிக்கை. அவன் புகழ் எங்கும் பரவியிருந்தது. மாலை வீட்டிற்குத் திரும்பி வருவான். வெளியிலிருந்து வருகின்ற கணவனை அம்பாசங்கரி அன்புடன் வரவேற்று இன்னுரை கூறி உபசரிப்பாள்.

நாள் சில கடந்தன. இறைவனருளால் அம்பாசங்கரி கருவுற்றாள். சுற்றத்தாரும் நண்பரும் மகிழ்ந்தார்கள். சிவகுரு தன் நண்பர் வீட்டில் நடக்குந் திருமணத்திற்குச் சென்றான். விருந்தருந்தி விட்டுத் திரும்பலாயினன். அத்திருமணத் தலைவர்



"அன்பரே! மாலை நடக்கும் சதுர்க்கச் சேரிக்கும் இருந்துவிட்டுப் போகலாமே?" என்று வேண்டினர். சிவகுரு, "இல்லை; என்னை மன்னிக்கவேண்டும். சதுர்பார்க்கின்ற வழக்கமில்லை. திருமண காலங்களில் சதுர்வைப்பதனால் பல இளைஞர்கள் மனம் மாறுதலடைகின்றனர். ஆதலால், எனக்கு விடைதாரும்" என்றான். அவர் "ஆர்வலரே! தாங்கள் கூறுவது உண்மையே. ஆயினும் என் செய்வது? ஒரு 5 நிமிஷம் இருந்துவிட்டுப் போகலாம். உங்கள் போன்றவர்கள் இருந்தால் தான் சிறப்புறும்" என்று வேண்டினர். சிவகுரு அவர் வேண்டுகோளுக் கிணங்கி இருந்தார். மாலை 5-மணி யாயிற்று. கல்யாண வீட்டில் திரளான கூட்டம். குறித்த நேரமாகியும் சதுராடுகின்ற "கோகிலகானம்" மோகன சுந்தரி வரவில்லை. கூட்டத்தில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. திருமணத்தின் தலைவர் வீதியில் நின்று அவள் வரும் வழிமேல் விழிவைத்து உள்ளம் வாடுவாராயினர். ஐந்தரை மணிக்கு இரட்டைக் குதிரை பூட்டிய வண்டியில் மோகன சுந்தரி வந்தாள். அவளைக் கண்டவுடன் அங்குள்ளோர் அனைவருக்கும் வானமுதத்தை கண்டாற் போன்ற மகிழ்ச்சி யுண்டாயிற்று. சதுர்தொடங்கிற்று. இடமின்றி கூட்டம் நெருங்கி ஒவ்வொருவரும் (இமையாமல் இருந்ததனால்) தேவர் போல் இருந்தனர். 5 நிமிஷம் இருக்கச் சொன்ன சிவகுரு சதுர் முடிகின்றவரை அசையாதிருந்தனன். அவன் மனம் பலாப்பழத்தில் ஈ மொய்ப்பதுபோல் மோகனசுந்தரியிடம் படிந்து விட்டது. அவள் இருக்குமிடத்தை மெல்ல உசாவி யுணர்ந்தான். சதுர் முடிந்தவுடன் அவளிடம் நெருங்கினன். பேச நா துடித்தது. கண் இமைத்தலை மறந்தன. புது உலகில் இருப்பதாக நினைத்தான். மோகனசுந்தரி அவனைக் கண்டு ஒரு புன்னகை செய்து கண் வலையை வீசிவிட்டு வண்டியேறிச் சென்றாள். சிவகுருவுக்கு எதிர்ப்பட்ட பொற்புதையலை யிழந்ததுபோல் இருந்தது. உள்ளம் சுழன்றது. வீட்டிற்கு வந்தான்.

கற்பின் கனியாகிய அவன் மனைவி எதிர்கொண்டு உபசரித்தாள். அவன் ஒன்றும் பேசாமலும் உண்ணாமலும் படுத்தான்.

கண்மூடிப் பார்த்தான். உறக்கம் வரவில்லை. மறுநாள் மாலை சிவகுரு மெல்ல மோகனசுந்தரி வீட்டை நோக்கிச் செல்வானாயினான். நாணம் ஒருபுறம் தடுத்தது. அவள்மீதுள்ள மோகம் ஒருபுறம் பிடர்பிடித்துந்தியது. அவள் வீட்டில் நுழைந்தான். இவனைக் கண்டவுடனே அவள் தன் மாயாவலையை வீசினாள். அவ்வலையிற் சிக்குண்ட சிவகுரு அவள் வீடே சுவர்க்கலோகம் என எண்ணினான். நாள் செல்லச் செல்ல அவனுடைய நேரத்தில் பலபாகம் அவள் வீட்டிலேயே கழிவதாயிற்று. முன் கரும்பாக இருந்த தன் மனைவி இப்போது வேம்பானாள். சிவகுருவின் தன்மையை அம்பாசங்கரி யறிந்தாள். கண்ணீர் வடித்தாள். "தெய்வமே! என்னை ஒருகணமும் பிரியாதிருந்த என்பதி இப்போது என்னைக் காணக் கண் கூசுகின்றனரே. அந்தோ! என் விதியிருந்தவாறென்னே? என் கணவன் மனம் திருந்தி நல்வழிப்பட அருள் செய்யவேண்டும். எம்பெருமானே! ஏழைபங்காளா! கணவனைப் பிரிந்து எத்தனை நாள் தனித்து வாழ்வேன்? அருள் புரிவீர்" என்று புலம்புவாள்.

சிவகுரு மோகனசுந்தரி வீட்டில் உல்லாசமாக இருப்பான்; அவள் உடம்பை வைரஆபரணங்களால் மறைத்துவிட்டான்; பல்லாயிரம் பணங்களை அவளுக்கு மனமகிழ்ச்சியுடன் கொடுத்தான் மோகனசுந்தரி சிவகுருவிடம் பல சூழ்ச்சி மொழிகளைக் கூறி மனைவியை அறவே வெறுக்கச் செய்து விட்டாள். அம்பாசங்கரிக்கு ஆண்மகவு பிறந்தது. அதனையும் சிவகுரு கண்டு மகிழ்ந்தானில்லை. குழந்தை பிறந்து ஆறுதிங்களாயிற்று.

ஒரு நாள் மாலை சிவகுரு தன் வீட்டிற்கு வந்தான். அம்பாசங்கரி கணவனைக் கண்டு களிகூர்ந்து குழந்தையைக் கொண்டு வந்து அவன் காலில் வீழ்த்தித் தானும் வணங்கி அவன் காற்புழுதியைக் கண்ணீரால் அலம்பினாள். விலைமகள் வலைப்பட்ட அவன் மனம் உருகவில்லை. குழந்தையையும் எடுத்து அணைத்தானில்லை. அம்பாசங்கரி, "பிராணேசா! என்மீது ஏன் இத்தனை கோபம்? தங்களைத் தவிர வேறு துணையின்றி வாடும் என்னைத் தள்ளிவிடாதீர். உங்கள் திருவடியே எனக்குப் பற்றுக்கோடு



குற்றமற்ற என்னை வெறுக்காதீர். என்னை வெறுத்தாலும் இந்தக் குழந்தையையாவது எடுத்து ஆதரியுங்கள் என்று கல்லும் உருக முறையிட்டாள். சிவகுரு ஒன்றும் பதில் கூறவில்லை. வெளியே புறப்பட்டு மோகனசுந்தரியின் வீட்டை நோக்கிச் சென்றான். இருட்டி விட்டது. அவன் செல்லும் வழி ஒற்றடிப்பாதை; வழியில் ஒன்று அவனைத் தடுத்தது. அதனைத் துண்டுவிரியன் பாம்பென்று எண்ணினான். ஒரு கல்லையெடுத்து அதன்மீது எறிந்தான்; அது விலகவில்லை. பயந்து வீட்டிற்கு வந்தான். கணவன் போனவுடனே தாளிட்டு அம்பாசங்கரி கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள்; சிவகுரு தாளிட்டிருப்பதைக் கண்டு திண்ணையில் நின்றான்; உடனே மேகங்கள் கூடி பெருமழை பொழிய ஆரம்பித்து விட்டது. அம்பாசங்கரியின் துன்பத்தைக் கண்டு பொறுக்காமல் வானம் அழுவதுபோலிருந்தது. அவனுடைய மனம் மோகனசுந்தரி வீட்டிற்குப் போகத் துடித்தது. மழை தடுத்தது. மனம் பதைத்தது; குடையும் விளக்கும் எடுத்துக் கொண்டு போக எண்ணிக் கதவைத் தட்டினான்; அம்பாசங்கரி கதவு தட்டுவது தன் ஆருயிர்க் கணவன் என்று தெரிந்து திறந்தாள். கணவன் கால்மேல் விழுந்தாள். சிவகுரு குடையைத் தேடினான்; கிடைக்கவில்லை. ஒரு தடியையும் விளக்கையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டான். அவனது மோகத்தின் வலிமைதான் யாதோ? கணவன் மழையில் புறப்படுவதை அம்பாசங்கரி கண்டாள்; குறுக்கிட்டுத் தொழுதாள். "அன்பே! அருட்கடலே! தவஞ்செய்து என்னை யீன்று வளர்த்த தாய் தந்தை தமர் முதலிய அனைவரையும் துறந்து உமது பாதமே கதியென்று வந்துள்ள என்னை வெறுப்பது உமது கருணைக்கு அழகோ? என் துன்பத்தைத் துடைப்பது உமது கடனன்றோ? தாங்கள் வழியில் கண்டு பயந்து வந்தது பாம்பன்று; வைக்கோற் புரியாகும். ஆதலால், அஞ்சாது செல்லும்"

மாதவத்தாற் பெற்றெடுத்தோர் மன்னுறவோர் தங்களைவிட்
டாதரவாய் நின் சீர் அடியடைந்தேன் அன்புடையாய்
காதலெனை நீத்தல் கடனோ நீ கண்டது வெவ்
வாதனைசெய் பாம்பன்று வைக்கோற் புரியாமே.

என்று கூறினள். அதைக்கேட்ட சிவகுரு வியப்புற்றான். "என்னே! நாம் வழியிற் கண்டது வைக்கோற் புரியென்பதும் நாம் பயந்து வந்ததும் இவளுக்கு எவ்வாறு தெரிந்தது? "இவள் சொன்னது உண்மைதானு? கண்டறிவோம்" என்று நடந்தான். கணவன் மழையில் செல்வதைக் கண்ட அக்கற்பரசி தன் முன்றானையைக் கிழித்து வீசினள். அது அவன் தலைக்குமேல் குடை போல் பறந்து சென்றது. இவ்வற்புதத்தைக் கண்ட சிவகுரு துணுக்குற்றான். விளக்குடன் போய் வழியில் கிடந்ததைக் கண்டான். அது அவள் கூறியபடி வைக்கோற்புரியாகவே இருந்தது. தன் மனைவியின் கற்பின் மாண்பினை யுணர்ந்தான். வெறுந் துண்டு குடைபோல் பறந்து மழையைத் தடுத்ததையும், வீட்டிலிருப்பவள் வழியிற் கண்டதை யுணர்ந்து கூறியதையும் நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்தான். அவன் மனம் அடியோடு மாறிவிட்டு "பாழும் நெஞ்சே! இத்தகைய கற்புக் கரசியை கலங்கவைத்தாயே? படுநீலியாகிய பரத்தை வலைப்பட்டு பாவத்திற்கு ஆளாகினையே? ஆண்டவனே! உத்தமியின் மனத்தை வருந்த வைத்த என்னை மன்னிக்க வேண்டும்" என்று பற்பல எண்ணித் திரும்பி வீட்டிற்கு வந்தான். கண்ணீர் சொரிந்து தன் படத்தை வைத்து வழிபட்டுக் கொண்டிருந்த மனைவியைக் கண்டான். அம்பாசங்கரி கணவனைக் கண்டு எழுந்து வணங்கினள். அவளை எடுத்துத் தழுவினன். "ஆருயிர்க் காதலி! நின் கற்பின் பெருமையை யுணர்ந்தேன். என்னை மன்னிப்பாய். உன் உள்ளத்தை வருந்தி விலைமகள் வலைப்பட்ட பாவியாகிய என்னை ஏற்றுக் கொள். நீயே கற்புத் தெய்வம்; நீயே என் குலவிளக்கு; இனி உன்னை ஒருகணமும் பிரியேன். மாசற்ற மாதரசே! உனது அன்புப் பெருக்குக்கு அளவுண்டோ? என்று கண்கலுழ்ந்து, நாத்தழுதழுத்து ஊனும் உள்ளமும் உயிரும் உருகி உரைத்தான். அம்பாசங்கரி தன் கணவன் மனம் நல்வழிப்பட்டதற்கு உள்ளம் உவந்து அவன் திருவடியை மீண்டும் வணங்கினள். சிவகுரு அம்பாசங்கரியுடன் பழையபடியே கருத்து ஒருமித்து தூயவாழ்வு நடாத்துவானுயினன்.

ஓம் குஹாய நம :

# குருபக்தி

"எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" என்பது நாம் சிறு பருவத்தில் படித்த பெரு மொழியாகும். குருமூர்த்தியை அகத்தேயும் புறத்தேயும் வழிபடுவதால் நினைத்தற்கரிய பெரும் பேற்றைப் பெறலாம் என்பது ஆன்றோர் கொண்ட ஒரு பெரு முடிபு. அநுபவத்திலும் அது கண்கூடு. குருபக்தியாலே உயர்வு பெற்றவர்களில் சாலவும் சிறந்து விளங்குபவர்கள் குருநமசிவாயர்; உதங்கர், உபமன்யு, ஆருணி, பைதர், அருச்சுனன், பத்மபாதர், ஏலேலசிங்கர், முதலியோராவர். இவர்களினும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குபவன் ஏகலவ்யன் என்ற ஒரு வேடனாகும். அவனுடைய குருபக்தி இமயமலையினும் உயர்ந்தது, கடலினும் ஆழமுடையது; எண்ணுதற்கும் எழுதுதற்கும் அரியது.

துவாபரயுக முடிவில் துரோணர் என்ற ஒரு குரு இருந்தார். அவர் அங்கிரஸ வம்ச திலகர்; சிறந்த அறிவுடையவர்; வேதங்களையும் வேதாங்கங்களையும் ஐயந்திரிபற உணர்ந்தவர்; வில்வித்தையிலும் இணையற்ற பாண்டித்ய முடையவர்; தான் கற்றவைகளை மாணவருக்குப் போதிக்கும் போதனாசக்தியுடையவர். அவர் தனது நண்பனாகிய பாஞ்சால தேசத்தை யாளும் துருபதனிடம் சிறிது கருத்து வேற்றுமை யடைந்து, அத்தினபுரம் வந்து, வீடுமால் போற்றப் பெற்று, குருகுல குமார்களாகிய பாண்டவர்களுக்கும், துரியோதனாதியர்க்கும் வில் வேதத்தைக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியாராக நியமிக்கப் பெற்றார். துரோணர் அந்த இருதிறத்து அரசிளங் குமார்கட்கும் பல சிறந்த முறைகளையும் எளிதில் விளங்கும்படி கற்பித்து வந்தார். அவரவர்களுடைய முயற்சிக்கும், குருபக்திக்கும், உடல்-உள்ளத்தின் ஊக்கத்திற்கும், பண்டைத் தவப்பயனுக்கும் தக்கவாறு அப்பிள்ளைகள் கல்வியில் வன்மை பெறுவாராயினர்கள்.

அவர்களில் அருச்சுனன் எல்லாப் பிள்ளைகளினும் சிறந்தவனாக முன்னணியில் நிற்பவனாயினான். சிலம்பகச் சாலைக்கு எல்லோரினும் முன்னர் வருவான்; துரோணரைக் காணும்போதெல்லாம் கருத்தாலும், கரத்தாலுந் தொழுவான்; குருநாதர் சொல்லித் தருபவைகளைக் கருத்தூன்றிக் கேட்பான்; கேட்டவைகளை மறக்காமல் மனத்தில் சிலையிலெழுத்தாகப் பதிய வைத்துக் கொள்வான். ஒரு முறை கேட்ட பாடத்தை மறுமுறை கேட்கின்ற வழக்கம் அவனிடமில்லை. கேட்ட விஷயத்தை மறப்பது மில்லை. நினைவாற்றலில் நிகரற்றவனாக விளங்கினான். எல்லோரும் வீட்டிற்குச் சென்றபின், குருவினுடைய தொண்டுகளைச் செய்து அவருடைய அநுமதிபெற்று வணங்கி வழிபட்டுச் செல்வான்; இதனால், அருச்சுனனிடம் துரோணருக்கு அளவற்ற அன்பு உண்டாயிற்று. கல்வியை விரைந்து கற்கும் சீடனிடம் ஆசிரியருக்கு அன்பு உண்டாவது இயற்கையே யன்றோ? துரோணர் அருச்சுனனுக்கு மிகச்சிறந்த புதிய முறைகளைக் கற்றுக் கொடுப்பாராயினார். அருச்சுனன் வில்வன்மையில் முதன்மை பெற்று வருவதைக் கண்ட கௌரவர்கள் அழுக்காறு கொண்டனர். பிறகு கர்ணனும் வேறு பல அரசகுமாரர்களும் துரோணரிடம் வில்வித்தையைப் பயிலவந்தார்கள். அத்தனைக் குமாரர்களுடைய நடுவில் அருச்சுனன், உடுக்குலத்தின் நடுவில் ஒளி செய்யும் முழுமதிபோல் சிறந்து விளங்கினான்.

இது இங்ஙன மிருக்க, இரணியதநுஸ் என்ற வேடராஜனுக்கு ஏகலவ்யன் என்ற ஒரு புதல்வனிருந்தான். அந்த ஏகலவ்யன் துரோணருடைய பெருமையைக் கேள்விப் பட்டான். அவருடைய திருவடியில் சிறந்த மதிப்பைச் செலுத்தினான். ஒரு நாள் துரோணரைத் தனியே சந்தித்து, அவர் பாத கமலத்தில் வீழ்ந்தான்; எழுந்து கைகூப்பி நின்றான்; "குருநாத! உமது திருவடியே அடியேனுக்குப் புகலிடம்; அடியேனுடைய அறியாமையை ஒழித்து ஆண்டருள்வீர்; உமது கடை மாணவனாக அடியேனை ஏற்றுக்கொள்வீர்" என்று வேண்டினான்".

(தொடரும்)

